உ

செந்திலாண்டவன் துணை

# கந்த சஷ்டி கவசம்
# சண்முக கவசம்
# கந்தரனுபூதி



திருச்செந்தூர்

ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி திருக்கோவில்

கந்த சஷ்டி வெளியீடு.

1382-ம் பசலி

## அறங்காவலர் குழு

திரு A. சின்ன அழகிரிசாமி நாயுடு

திரு S. K. இராமச்சந்திரத் தேவர்

திரு ஆ. நல்லகண்ணு

திரு P. கண்ணபிரான்

V. K. வேலுசாமி B. A.
நிர்வாக அதிகாரி

உ

செந்திலாண்டவன் துணை

# கந்த சஷ்டி கவசம்
# சண்முக கவசம்
# கந்தானுபூதி



திருச்செந்தூர் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி
திருக்கோவில் கந்த சஷ்டி விழா
வெளியீடு

**1382-ம் பசலி**

உ

முருகன் துணை



# ஸ்ரீ கந்தர் சஷ்டி கவசம்

## காப்பு

### நேரிசை வெண்பா

துதிப்போர்க்கு வல்வினைபோம் துன்பம்போம் நெஞ்சில்
பதிப்போர்க்குச் செல்வம் பலித்துக்-கதித்துஓங்கும்
நிஷ்டையும்கைகூடும், நிமலர் அருள்கந்தர்
சஷ்டி கவசந் தனை

### குறள் வெண்பா

அமரர் இடர்தீர அமரம் புரிந்த
குமரன்அடி நெஞ்சே குறி.

## நூல்

### நிலைமண்டில ஆசிரியப்பா

சஷ்டியை நோக்கச் சரவண பவனார்
சிஷ்டருக்கு உதவும் செங்கதிர் வேலோன்
பாதம் இரண்டில் பன்மணிச் சதங்கை

கீதம் பாடக் கிண்கிணி யாட
வையை நடஞ்செய்யும் மயில்வா கனனார்
கையில்வே லால்எனைக் காக்க என்றுஉவந்து
வரவர வேலா யுதனார் வருக,
வருக வருக மயிலோன் வருக.
இந்திரன் முதலா எண்திசை போற்ற
மந்திர வடிவேல் வருக வருக
வாசவன் மருகா வருக வருக
நேசக் குறமகள் நினைவோன் வருக
ஆறுமுகம் படைத்த ஐயா வருக
நீறிடும் வேலவன் நித்தம் வருக
சிரகிரி வேலவன் சீக்கிரம் வருக,
சரவண பவனார் சடுதியில் வருக,
ரவண பவச, ரரரர ரரர
ரிவண பவச ரிரிரிரி ரிரிரி
விணபவ சரவண வீரா நமோநம
நிபவ சரவண நிறநிறநிறென
வசர வணப வருக வருக.
அசுரர் குடிகெடுத்த ஐயா வருக
என்னை ஆளும் இளையோன் கையில்
பன்னிரண்டு ஆயுதம் பாசாங் குசமும்

பரந்த விழிகள் பன்னிரண்டு இலங்க
விரைந்துஎனைக் காக்க வேலோன் வருக
ஐயும் க்லியும் அடைவுடன் சௌவும்
உய்யொளி சௌவும், உயிரையுங் கிலியும்
கிலியுஞ் சௌவும். கிளரொளி யையும்,
நிலைபெற்று எனமுன் நித்தமும் ஒளிரும்
சண்முகன் நீயும், தனிஒளி யொவ்வும்
குண்டலி யாம்சிவ குகன்தினம் வருக
ஆறு முகமும், அணிமுடி ஆறும்,
நீறுஇடு நெற்றியும், நீண்ட புருவமும்,
பன்னிரு கண்ணும், பவளச்செவ் வாயும்
நன்னெறி நெற்றியில் நவமணிச் சுட்டியும்,
ஈராறு செவியில் இலகு குண்டலமும்.
ஆறுஇரு திண்புயத்து அழகிய மார்பில்
பல்பூஷணமும் பதக்கமும் தரித்து
நன்மணி பூண்ட நவரத்ன மாலையும்,
முப்புரி நூலும், முத்துஅணி மார்பும்
செப்பு அழகுடைய திருவயிறு உந்தியும்
துவண்ட மருங்கில் சுடரொளிப் பட்டும்,
நவரத்னம் பதித்த நல்சீ ராவும்,
இருதொடை அழகும் இணைமுழந் தாளும்

திருவடி யதனில் சிலம்பொலி முழங்க
செககண செககண செககண செகண
மொகமொக மொகமொக மொகமொக மொகென
நகநக நகநக நகநக நகென
டிகுகுண டிகுடிகு டிகுகுண டிகுண
ரரரர ரரரர, ரரரர ரரர
ரிரிரிரி ரிரிரிரி, ரிரிரிரி ரிரிரி
டுடுடு டுடுடு, டுடுடு டுடு
டகுடகு டிகுடிகு டங்கு டிங்குகு
விந்து விந்து, மயிலோன் விந்து
முந்து முந்து, முருகவேள் முந்து
என்தனை யாளும் ஏரகச் செல்வ!
மைந்தன் வேண்டும், வரமகிழ்ந்து உதவும்
லாலா லாலா லாலா வேசமும்
லீலா லீலா லீலா விநோதன்என்று
உன்திரு வடியை, உறுதியென்று எண்ணும்
என்தலை வைத்துஉன் இணையடி காக்க!
என்உயிர்க்கு உயிராம் இறைவன் காக்க
பன்னிரு விழியால், பாலனைக் காக்க
அடியேன் வதனம், அழகுவேல் காக்க
பொடிபுனை நெற்றியைப் புனிதவேல் காக்க

கதிர்வேல் இரண்டும் கண்ணினைக் காக்க
விதிசெவி இரண்டும் வேலவா காக்க
நாசிகள் இரண்டும் நல்வேல் காக்க
பேசிய வாய்தனைப் பெருவேல் காக்க
முப்பத்து இருபல் முனைவேல் காக்க
செப்பிய நாவைச் செவ்வேல் காக்க
கன்னம் இரண்டும் கதிர்வேல் காக்க
என்இளங் கழுத்தை இனியவேல் காக்க
மார்பை இரத்ன வடிவேல் காக்க
சேர்இள முலைமார் திருவேல் காக்க
வடிவேல் இருதோள் வளம்பெறக் காக்க
பிடரிகள் இரண்டும் பெருவேல் காக்க
அழகுடன் முதுகை அருள்வேல் காக்க
பழுபதி னாறும் பருவேல் காக்க
வெற்றிவேல் வயிற்றை விளங்கவே காக்க
சிற்றிடை அழகுறச் செவ்வேல் காக்க
நாண்ஆம் கயிற்றை நல்வேல் காக்க
ஆண்பெண் குறிகளை அயில்வேல் காக்க
பிட்டம் இரண்டும் பெருவேல் காக்க
வட்டக் குதத்தை வல்வேல் காக்க
பணைத்தொடை இரண்டும் பருவேல் காக்க

கணைக்கால் முழந்தாள் கதிர்வேல் காக்க
ஐவிரல் அடியிணை அருள்வேல் காக்க
கைகள் இரண்டும் கருணைவேல் காக்க
முன்கை இரண்டும் முரண்வேல் காக்க
பின்கை இரண்டும் பின்னவள் இருக்க
நாவில் சரஸ்வதி நல்துணை யாக,
நாபிக் கமலம், நல்வேல் காக்க
முப்பால் நாடியை, முனைவேல் காக்க
எப்பொழு தும்எனை எதிர்வேல் காக்க
அடியேன் வசனம் அசைவுள நேரம்
கடுகவே வந்து, கனகவேல் காக்க
வரும்பகல் தன்னில் வச்சிரவேல் காக்க
அரைஇருள் தன்னில் .அனையவேல் காக்க
ஏமத்தில், சாமத்தில், எதிர்வேல் காக்க
தாமதம் நீக்கிச் சதுர்வேல் காக்க
காக்க காக்க கனகவேல் காக்க
நோக்க நோக்க நொடியில் நோக்க
தாக்க தாக்க தடையறத் தாக்க
பார்க்க பார்க்க பாவம் பொடிபட
பில்லி சூனியம் பெரும்பகை அகல
வல்ல பூதம், வலாட்டிகப் பேய்கள்

அல்லல் படுத்தும் அடங்கா முனியும்
பிள்ளைகள் தின்னும் புழக்கடை முனியும்
கொள்ளிவாய்ப் பேய்களும், குறளைப் பேய்களும்
பெண்களைத் தொடரும் பிரமராட் சதரும்
அடியனைக் கண்டால் அலறிக் கலங்கிட,
இரிசிகாட் டேரிஇத்துன்பச் சேனையும்
எல்லினும், இருட்டிலும், எதிர்ப்படும் அண்ணரும்
கனபூசை கொள்ளும் காளியோடு அனைவரும்
விட்டாங் காரரும் மிகுபல பேய்களும்,
தண்டியக் காரரும், சண்டா ளங்களும்
என்பெயர் சொல்லவும் இடிவிழுந்து ஓடிட
ஆனை அடியினில், அரும்பா வைகளும்,
பூனை மயிரும் பிள்ளைகள் என்பும்.
நகமும் மயிரும், நீள்முடி மண்டையும்,
பாவைகள் உடனே பலகல சத்துடன்
மனையில் புதைத்த வஞ்சனை தனையும்
ஒட்டிய செருக்கும், ஒட்டிய பாவையும்
காசும் பணமும், காவுடன் சோறும்
ஓதும் அஞ்சனமும், ஒருவழிப் போக்கும்
அடியனைக் கண்டால் அலைந்து குலைந்திட
மாற்றான் வஞ்சகர் வந்து வணங்கிட

கால தூதாள்எனைக் கண்டால் கலங்கிட
அஞ்சி நடுங்கிட, அரண்டு புரண்டிட
வாய்விட்டு அலறி, மதிகெட்டு ஓட
படியினில் முட்டப் பாசக் கயிற்றால்
கட்டுடன் அங்கம், கதறிடக் கட்டு,
கட்டு உருட்டு கால்கை முறியக்
கட்டு கட்டு கதறிடக் கட்டு
முட்டு முட்டு, விழிகள் பிதுங்கிட
செக்கு செக்கு, செதில்செதி லாக
சொக்கு சொக்கு சூர்பகைச் சொக்கு
குத்து குத்து கூர்வடி வேலால்
பற்று பற்று, பகலவன் தணல்எரி
தணல்எரி தணல்எரி, தணல்அது ஆக,
விடுவிடு வேலை, வெருண்டது ஓடப்
புலியும் நரியும் புன்னரி நாயும்
எலியும் கரடியும். இனித்தொடாது ஓடத்,
தேளும் பாம்பும் செய்யான் பூரான்,
கடுவிட விஷங்கள் கடித்து, உயர்அங்கம்
ஏறிய விஷங்கள், எளிதுடன் இறங்க,
ஒளிப்பும் சுளுக்கும் ஒருதலை நோயும்
வாதம் சயித்தியம் வலிப்புப் பித்தம்
சூலைசயம் குன்மம் சொக்குச் சிரங்கு
குடைச்சல் சிலந்தி குடல்விப் பிரிதி
பக்கப் பிளவை, படர்தொடை வாழை

கடுவன், படுவன் கைத்தாள் சிலந்தி,
பற்குத்து, அரணை, பருவரை யாப்பும்
எல்லாப் பிணியும், என்தனைக் கண்டால்
நில்லாது ஓட, நீஎனக்கு அருள்வாய்.
ஈரேழ் உலகமும், எனக்கு உறவாக
ஆணும் பெண்ணும் அனைவரும் எனக்கா
மண்ணாள் அரசரும், மகிழ்ந்துஉற வாகவும்
உன்னைத் துதிக்க. உன்திரு நாமம்
சரவண பவனே சைலொளி பவனே!
திரிபுர பவனே! திகழொளி பவனே!
பரிபுர பவனே! பவம்ஒழி பவனே!
அரிதிரு மருகா! அமரா பதியைக்
காத்துத் தேவர்கள் கடுஞ்சிறை விடுத்தாய்!
கந்தா! குகனே! கதிர்வே லவனே!
கார்த்திகை மைந்தா! கடம்பா! கடம்பனை,
இடும்பனை யழித்த இனியவேல் முருகா!
தணிகா சலனே! சங்கரன் புதல்வா!
கதிர்காமத்து உறை, கதிர்வேல் முருகா!
பழநிப் பதிவாழ், பால குமரா!
ஆவினன் குடிவாழ், அழகிய வேலா!
செந்தின்மா மலையுறும் செங்கல்வ ராயா!

சமரா புரிவாழ், சண்முகத்து அரசே
காரார் குழலாள், கலைமகள் நன்றாய்
என்நா இருக்க, யான்உனைப் பாட
எனைத்தொடர்ந்து இருக்கும், எந்தை முருகனைப்
பாடினேன் ஆடினேன் பரவசம் ஆக
ஆடினேன் நாடினேன், ஆவினன் பூதியை
நேச முடன்,யான் நெற்றியில் அணியப்
பாச வினைகள் பற்றது நீங்கி,
உன்பதம் பெறவே, உன்அருள் ஆக
அன்புடன் இரட்சி அன்னமும் சொன்னமும்
மெத்தமெத் தாக, வேலா யுதனார்
சித்திபெற்று, அடியேன் சிறப்புடன் வாழ்க
வாழ்க வாழ்க மயிலோன் வாழ்க
வாழ்க வாழ்க வடிவேல் வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குரு வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குற மகளுடன்
வாழ்க·வாழ்க வாரணத் துவசம்
வாழ்க வாழ்க,என் வறுமைகள் நீங்க
எத்தனை குறைகள், எத்தனை பிழைகள்
எத்தனை அடியேன் எத்தனை செயினும்
பெற்றவன் நீகுரு, பொறுப்பது உன்கடன்

பெற்றவள் குறமகள்; பெற்றவ ளாமே
பிள்ளைஎன்று. அன்பாய்ப் பிரியம் அளித்து
மைந்தன்என் மீதுஉன் மனம்மகிழ்ந்து அருளித்
தஞ்சம்என்று அடியார் தழைத்திட அருள்செய்
கந்தர் சஷ்டி கவசம் விரும்பிய
பாலன் தேவ ராயன் பகர்ந்ததைக்
காலையில் மாலையில் கருத்துடன் நாளும்
ஆசா ரத்துடன் அங்கம் துலக்கி
நேச முடன்ஒரு நினைவது ஆகிக்
கந்தர் சஷ்டிக் கவசம் இதனைச்
சிந்தை கலங்காது தியானிப் பவர்கள்
ஒருநாள்முப்பத் தாறுஉருக் கொண்டு
ஓதியே செபித்து உகந்துநீறு அணிய
அட்டதிக்கு உள்ளோர் அடங்கலும் வசமாய்த்
திசைமன்னர் எண்மர், சேர்ந்தங் கருளும்
மாற்றலர் எல்லாம் வந்து வணங்குவர்
நவகோள் மகிழ்ந்து நன்மை அளித்திடும்
நவமதன் எனவும் நல்எழில் பெறுவர்
எந்த நாளும் ஈரெட்டாய் வாழ்வர்,
கந்தர்கை வேலாம் கவ்சத்து அடியை
வழியாய்க் காண மெய்யாய் விளங்கும்
விழியால் காண வெருண்டிடும் பேய்கள்

பொல்லா தவரைப் பொடிப்பொடி யாக்கும்
நல்லோர் நினைவில் நடனம் புரியும்,
சர்வ சத்துரு சங்கா ரத்தடி
அறிந்துஎனது உள்ளம் அட்டலச் சுமிகளில்
வீரலட் சுமிக்கு விருந்து உணவு ஆகச்,
சூரபத் மாவைத் துணித்தகை யதனால்
இருபத் தேழ்வர்க்கு, உவந்துஅமுது அளித்த
குருபரன், பழநிக் குன்றினில் இருக்கும்
சின்னக் குழந்தை சேவடி போற்றி.
எனைத்தடுத் தாட்கொள, என்தனது உள்ளம்
மேவிய வடிவுறும் வேலவ போற்றி
தேவர்கள் சேனா பதியே போற்றி
குறமகள் மனமகிழ் கோவே போற்றி
திறமிகு திவ்விய தேகா போற்றி
இடும்பா யுதனே இடும்பா போற்றி
கடம்பா போற்றி கந்தா போற்றி
வெட்சி புனையும் வேளே போற்றி.
உயர்கிரி கனக சபைக்குஓர் அரசே!
மயில்நடம் இடுவோய் மலரடி சரணம்.
சரணம் சரணம் சரவண பவஓம்,
சரணம் சரணம் சண்முகா சரணம்.

ஸ்ரீ கந்தர் சஷ்டி கவசம் முற்றிற்று



## ஓம் குஹப்பிரஹ்மணே நம:

## குமாரஸ்தவம்

ஓம் ஷண்முக பதயே நமோ நம:
ஷண்மத பதயே நமோ நம:
ஷட் [1]க்ரீவ பதயே நமோ நம:
ஷட்கீரீட பதயே நமோ நம:
ஷட்கோண பதயே நமோ நம:
ஷட்[2]கோச பதயே நமோ நம:
நவநிதி பதயே நமோ நம:
சுபநிதி பதயே நமோ நம:
நரபதி பதயே நமோ நம:
சுரபதி பதயே நமோ நம:
நடச்சிவ பதயே நமோ நம:
ஷடக்ஷர பதயே நமோ நம:
கவிராஜ பதயே நமோ நம:
தபராஜ பதயே நமோ நம:
இஹபர பதயே நமோ நம:
புகழ்முனி பதயே நமோ நம:
ஜய ஜய பதயே நமோ நம:
நய நய பதயே நமோ நம:
[3]மஞ்சுள பதயே நமோ நம:
குஞ்சரி பதயே நமோ நம:

---

க்ரீவம-கழுதது, [2]கோசம்-நூல். [3]மஞ்சுளம்—அழகு

ஓம் வல்லீ பதயே நமோ நம:
மல்ல பதயே நமோ நம:
அஸ்த்ர பதயே நமோ நம:
சஸ்த்ர பதயே நமோ நம:
ஷஷ்டி பதயே நமோ நம:
இஷ்டி பதயே நமோ நம:
அபேத பதயே நமோ நம
சுபோத பதயே நமோ நம:
(வ்)வியூஹ பதயே நமோ நம:
மயூர பதயே நமோ நம:
பூத பதயே நமோ நம:
வேத பதயே நமோ நம:
புராண பதயே நமோர நம:
(ப்)பிராண பதயே நமோ நம:
பக்த பதயே நமோ நம:
முக்த பதயே நமோ நம:
அகார பதயே நமோ நம:
உகார பதயே நமோ நம:
மகார பதயே நமோ நம:
விகாச பதயே நமோ நம:
ஆதி பதயே நமோ நம:
பூதி பதயே நமோ நம:
குமார பதயே நமோ நம:
அமார பதயே நமோ நம:

மாரஸ்தவம் முற்றிற்று.

ஓம் குஹப்பிரஹ்மணே நம:

பாம்பன்: ஸ்ரீமத் குமர குருதாச சுவாமிகள்

அருளிச்செய்த

# பகை கடிதல்

திருவளர் சுடருருவே, சிவைகரம் அமருருவே,
அருமறை புகழுருவே, யறவர்கள் தொழுமுருவே,
இருள் தபும் ஒளியுருவே யெனநினை யெனதெதிரே.
குருகுகண் முதன்மயிலே, கொணர்தியு னிறைவனையே.

மறைபுகழ் இறைமுனரே, மறைமுதல் பகருருவே,
பொறையுலி யுலகுருவே, புனநடை தருமுருவே,
இறையிள முகவுருவே, யெனநினை யெனதெதிரே,
குறைவறு திருமயிலே, கொணர்தியு னிறைவனையே.

இதரர்கள் பலபொரவே, யிவணுறையென தெதிரே,
மதிரவிபல வெனதேர், வளர்சர ணிடையெனமா,
சதுரொடு வருமயிலே, தடவரை யசைவுறவே,
குதிதரு மொருமயிலே, கொணர்தியு னிறைவனையே

பவநடை மனுடர்முனே, படருறுமென தெதிரே,
நவமணி நுதலணியேர், நகைபல மிடறணிமால்,
சிவணிய திருமயிலே, திடனொடு நொடிவலமே,
குவலயம் வருமயிலே, கொணர்தியு னிறைவனையே.

அழகுறு மலர்முகனே, அமரர்கள் பணிகுகனே,
மழவுரு வுடையவனே மதிநனி பெரியவனே,
இழவில ரிறையவனே, யெனநினை யெனதெதிரே,
குழகது மிளிர் மயிலே, கொணர்தியு னிறைவனையே.

இணையறு மறுமுகனே, இதசசி மருமகனே,
இணரணி புரள்புயனே, யெனநினை யெனதெதிரே,
கணபண வரவுரமே கலைவுற வெழுதருமோர்,
குணமுறு மணிமயிலே, கொணர்தியு னிறைவனையே.

எளியவ, என்இறைவ, குகாஎன நினை யெனதெதிரே,
வெளிநிகழ் திரள்களைமீன் மிளிர்சினையென மிடைவான்
பளபள வெனமினுமா, பலசிறை விரிதருநீள்,
குளிர்மணி விழிமயிலே, கொணர்தியு னிறைவனையே.

இலகயில் மயில்முருகா, வெனநினை யெனதெதிரே,
பலபல களமணியே, பலபல பதமணியே,
கலகல கலவெனமா, கவினொடு வருமயிலே,
குலவிடு சிகைமயிலே, கொணர்தியு னிறைவனையே.

இகலறு சிவகுமரா, வெனநினை யெனதெதிரே,
சுகமுனிவராஎழிலார், சுரர்பலர் புகழ்செயவே,
தொகுதொகு தொகுவெனவே, சுரநட மிடுமயிலே,
குகபதி யமர்மயிலே கொணர்தியு னிறைவனையே.

## 19

கருணைபெய் கனமுகிலே கடமுனிபணி முதலே,
அருணைய னரனெனவே, யகநினை யெனதெதிரே,
மருமல ரணிபலவே; மருவிடு களமயிலே,
குருபல வவிர்மயிலே, கொணர்தியு னிறைவனையே.

பகை கடிதல் முற்றிற்று.

இத்திருப்பதிகத்தைக் காலை மாலை பக்திபிறங்கப் பாடுநர்
செவ்வேட்பரமனை மயிலின்மீது தரிசிப்பர்.
பகையை வெல்வர்



உ

ஓம் குமார குருப்யோ நம:

# சண்முக கவசம்

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்

---

அண்டமாய் அவனியாகி யறியொணாப் பொருள தாகித்
தொண்டர்கள் குருவுமாகித் துகளறு தெய்வமாகி
எண் திசை போற்ற நின்ற என்னருள் ஈச னான
திண திறல் சரவ ணத்தான், தினமும்என் சிரசைக்
காக்க 1

ஆதியாங் கயிலைச் செல்வன் அணிநெற்றி தன்னைக் காக்க
தாதவிழ் கடப்பந் தாரான் தாளிருநுதலைக் காக்க
சோதியாந் தணிகை யீசன் துரிசிலா விழியைக்காக்க
நாதனாம கார்த்திகேயன் நாசியை நயந்து காக்க. 2

இருசெவி களையுஞ் செவ்வேள் இயல்புடன் காக்க வாயை
முருகவேள் காகக நாப்பல் முழுதுநற் குமரன் காக்க
துரிசறு கதுப்பையானைத் துண்டனார் துணைவன் காக்க
திருவுடன் பிடரி தன்னைச் சிவசுப்ர மணியன் காக்க 3

ஈசனாம் வாகு லேயன் யெனதுகந் தரத்தைக் காக்க
தேசுறு தோள்விலாவும் திருமகள் மருமகன் காக்க
ஆசிலா மார்பை யீரா றாயுதன் காக்க என்தன்
ஏசிலா முழங்கை தன்னை யெழிற்குறிஞ் சிக்கோன்
காக்க. 4

உறுதியாய் முன்கை தன்னை உமையிள மதலை காக்க
*தறுகணேறிடவே என்கைத் தலத்தைமா முருகன்காக்க
புறங்கையைஅயிலோன் காக்கபொறிகரவிரல்கள் பத்தும்
பிறங்குமால்மருகன் காக்க பின்முது கைச்சேய் காக்க. 5

ஊணிறை வயிற்றை மஞ்ஞை யூர்தியோன் காக்க வம்புத்
தோணிமிர் சுரேசன் உந்திச் சுழியினைக் காக்க குய்ய
நாணினை யங்கி கௌரி நந்தனன் காக்க பீஜ
ஆணியை கந்தன் காக்க அறுமுகன் குதத்தைக் காக்க. 6

எஞ்சிடா திடுப்பை வேலுக் கிறைவனூர் காக்க காக்க
அஞ்†சக ணமொரி ரண்டும், அரன்மகன் காக்க காக்க
விஞ்சிடு பொருட் காங்கேயன் விளரடித் தொடையைக் காக்க7
செஞ்சர ணேச வாசான் திமிருமுன் தொடையைக் காக்க

ஏரகத் தேவன் என்தாள் இருமுழங் காலுங் காக்க
சீருடைக் கணைக்கால் தன்னைச் சீரலை வாய்த்தே காக்க
நேருடைப் பரடிரண்டு நிகழ்பரங் கிரியன் காக்க
சீரிய குதிக்கால் தன்னைத் திருச்சோலை மலையன் காக்க. 8

ஐயுறு மலையன் பாதத்து அமர்பத்து விரலுங் காக்க
பையுறு பழநி நாத பரன்அகங் காலை காக்க
மெய்யுடன் முழுதும் ஆதி விமலசண் முகவன் காக்க
தெய்வநா யகவிசாகன் தினமும் என் னெஞ்சைக் காக்க.9

---

*றுகண் —அஞ்சாத் தன்மை †ஜகநப்ரதேசம்

ஒலியெழ வுரத்த சத்தத் தொடுவரு பூதப் ரேதம்
பலிகொள் இ ராக்க தப்பேய் பலகணத்து எவையானாலும்
கிலிகொள வெனைவேல்காக்க கெடுபரர் செய்யும் சூன்யம்
வலியுள மந்த்ரதந்த்ர வருத்திடா து அயில்வேல் காக்க10

ஓங்கிய சீற்ற மேகொண் டுவணிவில் வேல்சூ லங்கள்
தூங்கிய தண்டம் எஃகந் தடிபரசு ஈட்டியாதி
பாங்குடை யாயுதங்கள் பகைவர் என்மேலே யோச்சின்
தீங்குசெய் யாமல் என்னைத் திருக்கைவேல் காக்க காக்க 11

ஒளவிய முளர் ஊன் உண்போர் அசடர பேய் அரக்கர் புல்லர்
தெவ்வர்கள் எவரா னாலும் திடமுடனெனைமற் கட்டத்து
அவ்வியே வருவா ராயில் சராசர மெலாம் புரக்கும்
*கவ்வுடைச் சூட சண்டன் கையயில் காக்க காக்க 12

கடுவிடப் பாந்தள் சிங்கம் கரடிநாய் புலிமா யானை
கொடியகோ ணாய்கு ரங்கு கோலமார்ச் சாலம் சம்பு
நடையுடை யெதனாலேனு நானிடர்ப் பட்டி டாமல்
சடிதியில் வடிவேல் காகக சானவி முனைவேல் காக்க. 13

ஙகரமே போற்ற ஙீஇ ஞானவேல் காக்க வன்புள்
சிகரிதேள் நண்டுக் காலி செய்யான்ஏறு ஆலப் பல்லி
நகமுடை ஓந்தி பூரான் அளிவண்டு புலியின் பூச்சி
உகமிசை யிவையாற் எற்கோர் ஊறிலாது ஐவேல் காக்க 14

---

*கவ்வு-கயவு என்பதின் விகாரம், கயவு-பெருமை

சலத்திலுய் வன்மீ னேறு தண்டுடைத் திருக்கை மற்றும்
நிலத்திலும்சலத்திலுந்தான்நெடுந்துயர் தாற்கேயுள்ள
குலத்திளுல் நான்வ ருததங் கொண்டிடாது அவவவ் வேளை
பலத்துட னிருந்து காக்க பாவகி கூர்வேல் காக்க. 15

ஞமலியம் பரியன் கைவேல் நவக்கிரகக் கோள் காக்க
சுமவிழி நோய்கள் தந்த சூலையாக் கிரண ரோகம்
திமிர்கழல் வாதம் சோகை சிரமடி கர்ண ரோகம்,
எமையணு காம லேபன் னிருபுயன் சயவேல் காக்க. 16

டமருகத் தடிபோ லைக்கு தலையிடி கண்ட மாலை
குமுறுவிப் புருதி குன்மம் குடல்வலி ஈழை காசம்
நிமிரொணு திருத்தும் வெட்டை நீர்ப்பிர மேக மெல்லாம்
எமையடை யாம லேகுன் றெறிந்தவன் கைவேல் காக்க. 17

இணக்கமில் லாத புத்த வெரிவுமா சுரங்கள் கைகால்
முணக்கவே குறைக்குங் குஷ்டம் மூலவெண் மூளை தீ மந்தம்
சணத்திலே கொல்லும் சன்னி சாலமென் றறையுமிந்தப்
பிணிக்குலம் எனையா ளாமல் பெருஞ்சந்தி வடிவேல காக்க 18

தவனமா ரோகம் வாதம் சயித்தியம் அரோச கம்மெய்
சுவறவே செய்யு மூலச் சூடுயிளைப்பு வுடற்றி விக்கல்
அவதிசெய் பேதி சீழ்நோய் அண்டவா தங்கள் சூலை
எவையும்என் னிடத்துளய் தாமல் எம்பிரான் திணிவேல்
காக்க. 19

நமைப்புறு கிரந்தி வீக்கம் நணுகிடு பாண்டு சோபம்
அமர்த்திடு கருமை வெண்மை யாகுபஃ தொழுநோய்
ககசுல்
இமைக்குமுன் னுறுவ லிப்போடு எழுபுடைப் பகந்தராதி
இமைப்பொழு தேனும் என்னை யெய்தாம லருள்
வேல் காக்க. 20

பல்லது கடித்து மீசை படபடென் றேது டிக்கக்
கல்லினும் வலிய நெஞ்சங் காட்டியே யுருட்டி நோக்கி
எல்லினும் கரிய மேனி யெமபடர் வரினு மென்னை
ஒல்லையில் தாரகாரி ஓம்ஐம் ரீம் வேல் காக்க. 21

மண்ணிலும் மரத்தின் மீதும் மலையிலும் நெருப்பின்
மீதும்
தண்ணிறை சலத்தின் மீதும் சாரிசெய் யூர்திமீதும்
விண்ணிலும் பிலத்தி னுள்ளும் வேறெந்த விடத்து
மென்னை
நண்ணிவந் தருளார் சஷ்டி நாதன்வேல் காக்க
காக்க. 22

யகரமே போல சூலேந் தரும்புயன் வேல்முன் காக்க
அகரமே முதலாம் ஈராறு அம்பகன் வேலபின் காக்க
சகரமோ டாறு மானோன் தன்கைவேல் நடுவிற் காக்க
கரமின் தேவ மோலி திகழை மேல் கீழ்வேல் காக்க 23

ரஞ்சிதமொழி தேவானை நாயகன் வள்ளி பங்கன்
செஞ்சயவேல் கிழக்கில் திறமுடன் காக்க அங்கி
விஞ்சிடு திசையின் ஞானவீரன் வேலுகாக்க தெற்கில்
எஞ்சிடாக்கதிர் காமத்தான் இகலுடைக்கரவேல்
காக்க. 24

லகரமேபோல் காளிங்கனல் லுடனெளிய நின்று
தகரமர்த்தனமே செய்த சங்கரி மருகன் கைவேல்
நிகழெனே நிருதிதிக்கில நிலைபெறக்காக்க மேற்கில்
இகலயில் காக்க வாயுவினில் குகன் கதிரவேல் காக்க. 25

வடதிசை தன்னில் ஈசன்மகன் அருள் திரிவேல் காக்க
விடையுடை ஈசன் திக்கில் வேதபோதகன்வேல் காக்க
நடக்கையில் இருக்கு ஞானறும் நவில்கையில்
நிமிர்கையில் கீழ்க்
கிடக்கையில் தூங்கு ஞான்றும் கிரிதுளைத்துளவேல்
காக்க 26

இழந்துபோகாத வாழ்வை ஈயுமுத்தையனார் கைவேல்
வழங்குநல்ஊண் உண்போதுமமால் விளையாட்டின்
போது
பழஞ்சுரர் போற்றும் பாதம் பணிந்து நெஞ்சடக்கும்
போதும்
செழுங்குணத்தோடேகாக்க திடமுடன் மயிலும்காக்க.27

இளமையில் வாலி பத்தில் ஏறிடு வயோதி கத்தில்
வளர்அறு முகச்சி வன்தான் வந்தெனைக் காக்க காக்க
ஒளியெழு காலை முன்எல் ஓம்சிவ சாமி காக்க
தெளிநடு பிற்ப கற்கால் சிவகுரு நாதன் காக்க. 28

இறகுடைக்கோழித்தோகைக்கிறைமுன் இராவிற்காக்க
திறலுடைச் சூர்பு கைத்தே திகழ்பின் இராவிற் காக்க
நறவுசேர் தாள்சி லம்பன் நடுநிசி தன்னிற் காக்க
மறைதொழு குழகன் எங்கோன் மாறுது காக்க காக்க. 29

இனமெனத்தொண்டரோடும் இணங்கிடும் செட்டிகாக்க
தனிமையில் கூட்டந் தன்னில் சரவண பவனார் காக்க
நனியனு பூதி சொன்ன நாதர்கோன் காக்க இத்தைக்
கனிவொடு சொன்ன தாசன் கடவுள்தான் காக்க
வந்தே. 30

சண்முக கவசம் முற்றிற்று.

உ

செந்திலாண்டவன் துணை

ஸ்ரீ அருணகிரிநாதர் அருளிய

# கந்தரனுபூதி

---

## காப்பு

### விபூதி தியானம்

நெஞ்சக் கனகல் லும்நெகிழ்ந் துருகத்
தஞ்சத் தருள்சண் முகனுக் கியல்சேர்
செஞ்சொற் புனைமா லைசிறந் திடவே
பஞ்சக் கரவா னைபதம் பணிவாம்.

## நூல்

### மதயானையை வெல்ல

ஆடும் பரிவேல் அணிசே வலெனப்
பாடும் பணியே பணியா அருள்வாய்;
தேடுங் கயமா முகனைச் செருவில்
சாடுந் தனியா னைசகோ தரனே.

### வணங்காரைத் தண்டிக்க

உல்லா சநிரா குலயோ கிதச்
சல்லா பவிநோ தனுநீ யலையோ?
எல்லா மறவென் னையிழந் தநலஞ்
சொல்லாய், முருகா! சுரபூ பதியே.

கல்வியின் மெச்ச

வானோ புனல்பார் கனல்மா ருதமோ
ஞானோ தயமோ நவில்நான் மறையோ
யானோ மனமோ எனையாண் டவிடம்
தானோ பொருளா வதுசண் முகனே. 3

துறவு பெற

வளைபட் டகைம்மா தொடுமக் களெனுந்
தளைபட் டழியத் தகுமோ! தகுமோ!
கிளைபட் டெழுசூ ருரமுங் கிரியுந்
தொளைபட் டுருவத் தொடுவே லவனே. 4

மாயையை ஒழிக்க

மகமா யைகளைந் திடவல் லபிரான்
முகமா றுமொழிந் துமொழிந் திலனே.
அகமா டைமடந் தையரென் றயருஞ்
சகமா யையுள்நின் றுதயங் குவதே. 5

மாதரைத் தழுவ

திணியா னமனோ சிலைமீ துனதாள்
ணியா ரரவிந் தமரும் புமதோ?
ப ணியா வெனவள் ளிபதம் பணியும்
ணியா அதிமோ கதயா பரனே. 9

### தீராப்பிணி தீர

கெடுவாய் மனனே! கதிகேள்; கரவா
திடுவாய்; வடிவேல் இறைதாள் நினைவாய்
சுடுவாய் நெடுவே தனைதூள் படவே,
விடுவாய் விடுவாய் வினையா வையுமே 7

### குடிகளைத் தன் வசமாக்க

அமரும் பதிகே ளகமா மெனுமிப்
பிமரங் கெடமெய்ப் பொருள்பே சியவா!
குமரன் கிரிரா சகுமா ரிமகன்
சமரம் பொருதா னவநா சகனே. 8

### பெண்ணாசை ஒழிக்க

மட்டூர் குழல்மங் கையர்மை யல்வலைப்
பட்டூ சல்படும் படரென் றொழிவேன்,
தட்டூ டறவேல் சயிலத் தெறியும்
நிட்டூ ரநிரா குலநிர்ப் பயனே.

### நமனை விலக்க

கார்மா மிசைகா லன்வரிற் கலபத்
தேர்மா மிசைவந் தெதிரப் படுவாய்;
தார்மார் பவலா ரிதலா ரியெனுஞ்
சூர்மா மடியத் தொடுவே லவனே. 10

தளிகை சேர்க்க

கூகா வெனவென் கிளைகூ டியழப்
போகா வகைமெய்ப் பொருள்பே சியவா!
நாகா சலவே லவநா லுகவித்
தியாகா சுரலோர் கசிகா மணியே. 11

களவு வெல்ல

செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்
சும்மா இருசொல் லறஎன் றலுமே
அம்மா பொருளொன் றுமறிந் திலனே. 12

இருள்வழி நடக்க

முருகன் தனிவேல் முனிநங் குருவென்
றருள்கொண் டறியார் அறியுந் தரமோ!
உருவன் றருவன் றுளதன் றிலதன்
றிருளன் றொளியன் றெனநின் றதுவே. 13

பாததரிசனஞ் செய்ய

கைவாய் கதிர்வேல் முருகன் கழல்பெற்
றுய்வாய்; மனனே! ஒழிவாய் ஒழிவாய்;
மெய்வாய் விழிநா சியொடுஞ் செவியாம்
ஐவாய் வழிசெல் லுமவா வினையே. 14

### அஷ்டாவதானஞ் செய்ய

முருகன் குமரன் குகனென் றுமொழிந்
துருகுஞ் செயல்தந் துணர்வென் றருள்வாய்,
பொருபுங் கவரும் புவியும் பரவுங்
குருபுங் கவ!எண் குணபஞ் சரனே. 15

### பேராசை விலக்க

பேரா சையெனும் பிணியிற் பிணிபட்
டோரா வினையேன் உழலத் தகுமோ?
வீரா முதுசூர் படவேல் எறியுஞ்
சூரா! சுரலோ கதுரந் தரனே. 16

### தன்னடத்தை மேன்மையாக

யாமோ தியகல் வியுமெம் மறிவுந்
தாமே பெறவே லவர்தந் ததனாற்
பூமேன் மயல்போ யறமெய்ப் புணர்வீர்
நாமே னடவீர் நடவீ ரினியே. 17

### கற்பழியாதிருக்க

உதியா மரியா உணரா மறவா
விதிமா லறியா விமலன் புதல்வா!
அதிகா! அநகா! அபயா! அமரா
பதிகா வல!சூ ரபயங் கரனே. 18

### இல்வாழ்க்கை நீக்க

வடிவுந் தனமும் மனமுங் குணமும்
குடியுங் குலமுங் குடிபோ கியவா;
அடியந் தமிலா அயில்வே லரசே!
மிடியென் றொருபா விவெளிப் படினே. 19

### அனுக்கிரகம் பெற

அரிதா கியமெய்ப் பொருளுக் கடியேன்
உரிதா உபதே சமுணர்த் தியவா
விரிதா ரணவிக் ரம!வேள்! இமையோர்
புரிதா ரக!நா கபுரந் தரனே. 20

### திருவடி வணங்க

கருதா மறவா நெறிகா ணவெனக்
கிருதாள் வனசந் தரவென் றிசைவாய்;
வரதா! முருகா! மயில்வா கனனே!
விரதா சுர!சூ ரவிபா டணனே. 21

### தவம் பெற

காளைக் குமரே சனெனக் கருதித்
தாளைப் பணியத் தவமெய் தியவா!
பாளைக்குழல்வள் ளிபதம் பணியும்
வேளைச் சுரபூ பதிமே ருவையே. 22

சலிகை சொல்ல

அடியைக் குறியா தறியா மையினேன்
முடியக் கெடவோ? முறையோ முறையோ?
வடிவிக் ரமவேல் மகிபா! குறமின்
கொடியைப் புணருங் குணபூ தரனே. 23

மாதர் வலையில் அகப்படாதிருக்க

கூர்வேல் விழிமங் கையர்கொங் கையிலே
சேர்வே னருள்சே ரவுமெண் ணுமதோ?
சூர்வே ரொடுகுன் றுதொளைத் தநெடும்
போர்வே ல!புரந் தரபூ பதியே. 24

மகாவினை ஒழிக்க

மெய்யே யெனவெவ்வினைவாழ் வையுகந்
தையோ! அடியேனலையத் தகுமோ?
கையோ அயிலோ கழலோ முழுதுஞ்
செய்யோய்! மயிலே றியசே வகனே! 25

யாருமற்ற பேர்க்கு ஆதாரமாக

ஆதா ரமிலேன் அருளைப் பெறவே
நீதா னொருசற் றுநினைந் திலையே;
வேதா கமஞா னவினோ தமனோ
தீதா! சுரலோ கசிகா மணியே 2

பாக்கியத்தை விதிவழி அனுபவிக்க

மின்னே நிகர்வாழ் வைவிரும் பியயான்
என்னே விதியின் பயனிங் கிதுவோ!
பொன்னே! மணியே! பொருளே! அருளே!
மன்னே மயிலே றியவா னவனே. 27

தான் அவனாக

ஆனா அமுதே! அயில்வே லரசே!
ஞானா கரனே! நவிலத் தகுமோ!
யானா கியவென் னைவிழுங் கிவெறுந்
தானாய் நிலைநின் றதுதற் பரமே. 28

கடவுள் முன்கோபமாற்ற

இல்லே யெனுமா யையிலிட் டெனைநீ
பொல்லே னறியா மைபொறுத் திலையே
மல்லே புரிபன் னிருவா குவிலென்
சொல்லே புனையுஞ் சுடர்வே லவனே. 29

வழக்குப் பேச

செவ்வா னுருவிற் றிகழ்வே லவனன்
றொவ்வா தெனவுணர் வித் ததுதான்
அவ்வா றறிவா ரறிகின் றதலால்
இவ்வா றொருவர்க் கிசைவிப் பதுவே. 30

கடவுள் முன்னிலையில் ஞானம் பெற

பாழ்வாழ் வெனுமிப் படுமா யையிலே
வீழ்வா யெனவென் னைவிதித் தனையே;
தாழ்வா னவைசெய் தனதா முளவோ?
வாழ்வா யினிநீ; மயில்வா கனனே. 31

கொலை மறுத்தல்

கலையே பதறிக் கதறித் தலையூ
டலையே படுமா றதுவாய் விடவோ?
கொலையே புரிவே டர்குலப் பிடிதோய்
மலையே! மலைகூ றிடுவா கையனே. 32

வியாகூலம் ஒழிக்க

சிந்தா குலவில் லொடுசெல் வமெனும்
விந்தா டவியென் றுவிடப் பெறுவேன்
மந்தா கினிதந் தவரோ தயனே!
கந்தா! முருகா! கருணா கரனே! 33

பெண்களைத் தாயாக நினைக்க

சிங்கா ரமடந் தையர்தீ நெறிபோய்
மங்கா மலெனக் குருவரந் தருவாய்
சங்ரா மசிகா வல!சண் முகனே
கங்கா நதிபா லக்ருபா கரனே. 34

சரீர வாஞ்சை ஒழிக்க

விதிகா ணுமுடம் பைவிடா வினையேன்
கதிகா ணமலர்க் கழலென் றருள்வாய்;
மதிவா ணுதல்வள் ளியையல் லதுபின்
துதியா விரதா சுரபூ பதியே. 3

கடவுளைக் காண

நாதா! குமரா நமவென் றரனார்
ஓதா யெனவோ தியதெப் பொருள்தான்?
வேதா முதல்விண் ணவர்சூ டுமலர்ப்
பாதா குறமின் பதசே கரனே. 36

தனது அகந்தையை ஒழிக்க

கிரிவாய் விடுவிக் ரமவே லிறையோன்
பரிவா ரமெனும் பதமே வலையே
புரிவாய். மனனே! பொறையா மறிவால்
அரிவா யடியோ டுமகந் தையையே. 37

பிசாசம் ஒழிக்க

ஆதா ளியையொன் றறியே னையறத்
தீதா ளியையாண் டதுசெப் புமதோ?
கூதா ளகிராத் குலிக் கிறைவா!
வேதா ளகணம் புகழ்வே லவனே. 38

## ஜனனம் எடாதிருக்க

மாவேழ் சனனங் கெடமா யைவிடா
மூவே டணையென் றுமுடிந் திடுமோ?
கோவே! குறமின் கொடிதோள் புணருந்
தேவே! சிவசங் கரதே சிகனே. 39

## மாயை தெளிய

வினையோ டவிடுங் கதிர்வேல் மறவேன்
மனையோ டுதியங் கிமயங் கிடவோ?
சுனையோ டருவித் துறையோ டுபசுந்
தினையோ டிதணோ டுதிரிந் தவனே. 40

## நித்தியதேகம் பெற

சாகா; தெனையே சரணங் களிலே
காகா; நமனார் கலகம் செயுநாள்
வாகா முருகா! மயில்வா கனனே!
யோகா சிவஞா னோபதே சிகனே. 41

## நின்ற நிலை நிற்க

குறியைக் குறியா துகுறித் தறியும்
நெறியைத் தனிவே லைநிகழ்த் திடலுஞ்
செறிவற் றுலகோ டுரைசிந் தையுமற்
றறிவற் றறியா மையுமற் றதுவே. 42

### ஆசாணுகி அனுக்கிரகிக்க

தூசா மணியுந் துகிலும் புனைவாள்
நேசா! முருகா! நினதன் பருளால்
ஆசா நிகளந் துகளா யினபின்
பேசா அனுபூ திபிறந் ததுவே. 43

### குரு மந்திரம் பெற

சாடுந் தனிவேல் முருகன் சரணஞ்
சூடும் படிதந் ததுசொல் லுமதோ?
வீடுஞ் சுரர்மா முடிவே தமும்வெங்
காடும் புனமுங் கமழுங் கழலே.

### கல்வியில் சம்பாஷிக்க

கரவா கியகல் வியுளார் கடைசென்
றிரவா வகைமெய்ப் பொருளீ குவையோ?
குரவா! குமரா! குலிசா யுத!குஞ்
சரவா! சிவயோ கதயா பரனே!

### மன வருத்தந் தீர

எந்தா யுமெனக் கருள்தந் தையுநீ;
சிந்தா குலமா னவைதீர்த் தெனையாள்
கந்தா! கதிர்வே லவனே! உமையாள்
மைந்தா! குமரா! மறைநா யகனே.

ஆனந்த நடனம் காண

ஆறா றையுநீத் ததன்மேல் நிலையைப்
பேறா அடியேன் பெறுமா றுளதோ?
சீறா வருசூர் சிதைவித் திமையோர்
கூறா உலகங் குளிர்வித் தவனே. 47

நற்சொரூபங் காண

அறிவொன் றறநின் றறிவார் அறிவிற்
பிறவொன் றறநின் றபிரா னலையோ?
செறிவொன் றறவந் திருளே சிதைய
வெறிவென் றவரோ டுறும்வே லவனே. 48

தன்னை அறிந்து கொள்ள

தன்னந் தனிநின் றதுதான் அறிய
இன்னம் மொருவர்க் கிசைவிப் பதுவோ?
மின்னுங் கதிர்வேல் விகிர்தா! நினைவார்
கின்னங் களையுங் க்ருபைசூழ் சுடரே. 49

அவா அறுக்க

மதிகெட் டறவா டிமயங் கியறக்
கதிகெட் டவமே கெடவோ கடவேன்?
நதிபுத் திர!ஞா னசுகா திப!வத்
திதிபுத் திரர்வீ றடுசே வகனே. 5௦

நினைத்தபடி தரிசனம் கொடுக்க

உருவாய் அருவாய் உளதாய் இலதாய்
மருவாய் மலராய் மணியா யொளியாய்க்
கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்
குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.

வேலுமயிலுந் துணை



உமா அச்சகம், திருநெல்வேலி-6.

# வேண்டுகோள்

இத்திருக்கோவிலில் தங்கரதம் செய்வதற்கு ஏற்பாடாகி வேலையும் நடந்து வருகிறது. அதற்கு நன்கொடையாக தங்கமோ, பணமோ திருக்கோவில் நிர்வாக அதிகாரிக்கு அனுப்பி செந்தில் ஆண்டவன் கருணைக்கு பாத்திரமாக வேண்டுகிறோம்.

தவிரவும் இத்திருக்கோவிலில் சுவாமி, அம்பாள் அலங்காரத்திற்கு புஷ்பம் சாத்த வேண்டிய வகைக்கு "புஷ்ப கட்டளை நிதி" என்று ஏற்பாடு செய்யப் பட்டிருக்கிறது. இது வகைக்கும் பணம் அனுப்ப விரும்புகிறவர்கள் கோவில் நிர்வாக அதிகாரிக்கு அனுப்பி வைக்க வேண்டப் படுகிறது.

நிர்வாக அதிகாரி